புதுக்கோட்டை மாவட்ட வரலாற்று டைரி

# ரத்தினம் செட்டியார்

சைவ சித்தாந்தத்தில் தனக்கென தனி இடம் பிடித்த விராச்சிலை ரத்தினம் செட்டியார் குறித்து இன்றைய டைரியில் பார்ப்போம்.

புதுக்கோட்டை மாவட்டம் விராச்சிலையை சேர்ந்த பழனியப்ப செட்டியார் - நாகம்மை தம்பதியினருக்கு மகனாக 18-8-1921ம் ஆண்டு ரத்தினம் பிறந்தார். இவருடன் கோபால், ஆண்டியப்பன் என்ற சகோதரர்களும் 4 சகோதரிகளும் உடன் பிறந்தவர்கள். இவரது தாத்தா முருகப்ப செட்டியார் விராச்சிலை சிவன் கோவிலில் விளக்கிடுதல், நூல் இடுதல், நந்தவனம் வைத்தல், திருமுறைபாடல்களை பாடுதல் உட்பட பல பணிகளை தனது 81 வயது வரை செய்து வந்தார். ரத்தினம் இரண்டாம் வகுப்பு வரை பள்ளிக்கு சென்றார். 11 வயது வரை வீட்டில் இரண்டு தாத்தாக்களிடமும் தேவாரம், திருவாசகம், நாயன்மார் வரலாறு, புராணக் கதைகள், ராமாயணம், மகாபாரதம் ஆகியவற்றை ரத்தினம் செட்டியார் கற்று தேர்ந்தார். தொடர்ந்து தனது தந்தையுடன் 11 வயதில் மலேசியாவில் பத்துபகாட்டிற்கு சென்றார். 1932 முதல் 1940ம் ஆண்டு வரை பத்துபகாட் அரசு உயர்நிலைப்பள்ளியில் சீனியர் கேம்பிரிஜ் வரை ஆங்கில கல்வி பயின்றார். தொடர்ந்து லண்டன் பல்கலைக்கழகம் வைத்த தேர்வில் வெற்றி பெற்று சீனியர் கேம்பிரிஜ் பட்டம் பெற்றார். கல்லூரி கல்வி முடிந்ததும் 1940ம் ஆண்டு இந்தியாவிற்கு ரத்தினம் செட்டியார் திரும்பி வந்தார். தமிழ் மீது உள்ள ஆர்வத்தால் மதுரை தமிழ்ச்சங்க தேர்வுக்கு படிக்க தொடங்கினார். இந்த தேர்வுக்காக நன்னூல், தொல்காப்பியம், குறுந்தொகை, வெண்பாமாலை, புறநானூறு மற்றும் இலக்கண இலக்கிய நூல்களை கற்றார். இளமையிலிருந்தே தியானம் , ஜபம், திருமுறைபாராயணம், சமய நூல்களை ஆராயும் பணியினை மேற்கொண்டனர். ராமகிருஷ்ண பரமஹம்சரின் கருத்துகள், பகவத்கிதை, பிரம்மசூத்திரம் ஆகியவற்றை படித்தார். தமிழில் கைவல்யநவநீதம் ஆகியவற்றை படித்து தேர்ச்சியடைந்தார். தனது 24ம் வயதில் மீனாட்சி என்பவரை திருமணம் செய்து கொண்டார். ரத்தினம் செட்டியார் 1951ம் ஆண்டு அப்பர் அடிகள் குறித்து முதன்முதலாக பேசினார். 1959ம் ஆண்டு பதி இலக்கணம் குறித்து பேசினார். 1973ம் ஆண்டு கம்பன் பற்றிய பேச்சுகள் உணர்ச்சிப்பிழம்பாக இருந்தது. தொடர்ந்து தமிழகம் மட்டுமல்லாமல் தமிழ் மொழி பேசும் மக்களிடையே இவரது இலக்கிய சொற்பொழிவுகள் வரவேற்பை பெற்றன. சைவ சித்தாந்த சமாஜம் நடத்திய நிகழ்ச்சியில் அவரது பேச்சுகள் சைவ சமயத்தினர் அறிந்திராத கருத்துகளை எடுத்துரைத்ததால் சான்றோர்களிடையே பலத்த வரவேற்பை பெற்றது. சைவ சித்தாந்த சமாஜத்தின் 75 வது ஆண்டு மாநாடு இலங்கையில் நடந்தது. அந்த மாநாட்டிற்கு தலைமை வகித்து ரத்தினம் செட்டியார் சிறப்பாக நடத்தினார். கடவுளால் முடியாத செயல்கள் நடைகளும் விடைகளும் , வாலிவதம் சரியா, புலால் தின்பது தீவினையா உட்பட பல நூல்களை ரத்தினம் செட்டியார் எழுதினார். 1959ம் ஆண்டு குன்றக்குடி அடிகளார் அருள்நெறிசெல்வர் என்ற பட்டம் வழங்கினார். 1960ம் ஆண்டு மலேசியா தமிழ்ச் சங்கங்களின் சார்பில் புலவர் மணி என்ற பட்டத்தை மலேசிய அமைச்சர் சம்பந்தம் வழங்கினார். 1962ம் ஆண்டு சைவ சித்தாந்தத்திற்கு ஆற்றிய தொண்டை பாராட்டி சித்தாந்த வித்தகர் பட்டமும், 1978ம் ஆண்டு புதுக்கோட்டை தமிழ்ச் சங்கத்தார் சார்பில் செந்தமிழ்திலகம் என்பது உட்பட பல விருதுகள் பதக்கங்கள் அவரை தேடி வந்து அலங்கரித்தன.